முருகா

## இலக்ஷார்ச்சனை

காங்கேயநல்லூர் ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமிகோயிலில் கீலக வரு ஐப்பசி மீ 5-ஆந் தேதி முதல் 10-ஆந் தேதி வரை (21-10-68 முதல் 26-10-68 வரை) இலக்ஷார்ச்சனை மிகச் சிறப்புற நடைபெறும். அர்ச்சனை செய்ய விருப்பமுள்ளவர்கள் அர்ச்சனை ஒன்றுக்குக் கட்டணம் ரூ. 7-50 வீதம் கீழ்க்கண்ட விலாசத்திற்கு அனுப்பி வைக்க வேண்டுகிறோம்.

K. M. குப்புசாமி முதலியார்
நிர்வாக தர்மகர்த்தா

ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி கோயில், காங்கேயநல்லூர் PO.
Via காட்பாடி எக்ஸ்டன்ஷன் N.A.

20-10-68க்குள் சேருமாறு திருப்புகழமிர்தம் ஆபீஸ், சிந்தாதிரிப் பேட்டை, சென்னை-2 என்ற விலாசத்துக்கும் அனுப்பிவைக்கலாம்.

## சந்தா நேயர்களுக்கு

நமது திருப்புகழமிர்த இதழ்கள் மாதா மாதம் ஆங்கிலத் தேதி 16 அளவில் தபாலில் சேர்க்கப்படுகின்றன. நன்கு சரி பார்த்த பின்னரே தபாலில் சேர்க்கப்படுவதால் இவ்விடம் தவறு நேர இட மில்லை. ஆகவே தபால் இலாகாவில் ஏற்படும் குறை காரணமாக இதழ்கள் கிடைக்கப் பெறாத அன்பர்கள் அந்த ஆங்கில மாதம் 25 தேதி வரை பார்த்திருந்து அது வரை கிடைக்கவில்லையாகில் பின்னரே எமக்கு எழுத வேண்டும். அந்தந்த ஆங்கில மாத முடிவுக் குள் (30 அல்லது 31 தேதிக்குள்) தெரிவிக்காத அன்பர்கள் பின்னர் இதழ் ஒன்றுக்கு 35 காசுகள் வீதம் செலுத்தியே பெறலாம். குறிப் பிட்ட அளவு பிரதிகளே அச்சிடப்படுவதால் பிரதிகள் கைவசம் இருப்பதை அனுசரித்தே அனுப்பிவைக்கப்படும். ஆங்கில மாதம் 25 தேதிக்குள் பிரதிகள் கிடைக்கவில்லையென்று எழுதினால் கவனிக் கப்படமாட்டாது. அடிக்கடி இதழ்கள் கிடைக்கப் பெறாத நிலையில் உள்ளவர்கள் அந்தந்த வட்டார தபால் அதிகாரிகளுக்கு எழுதி ஒழுங்கு செய்துகொள்ள வேண்டும்.

மானேஜர், திருப்புகழமிர்தம்.

பிறப்பு எய்தும். 'விதிகாணும் உடம்பை விடா வினையேன்'' என்பது அநுபூதி வாக்கு. வினைப் பயனைச் செய்தவன் அநுபவித்தே தீரவேண்டும். உன் மீதுள்ள கருணையால் இதனை உனக்குக் கூறினேன்'' என்று அருளிச் செய்தார்.

அரசன் இதனைக் கேட்டு நடுநடுங்கினான். அவனுடைய கண்களிலிருந்து நீர் ஆறாய்ப் பெருகியது. ''அந்தோ! மூடனேன் என் செய்தேன். சாமான்ய மனிதருக்குக்கூட இடர் புரியாத சிறியேன் சிவஞானியிடம் பிழைத்துவிட்டேன். ''குருநாதா! அந்த வினை கழிய உபாயமே யில்லையா? கருணைபுரிந்து உய்யும் வழியை உரைத் தருளும்'' என்று அழுது அவருடைய அடிமலர் மீது வீழ்ந்து புலம்பினான்.

முனிவர் பெருமான், ''மன்னர் பெருமானே! இதற்கு ஒரு வழியுளது. பரிசுத்தமான நல்லவர்கள்மீது இல்லாத ஒரு பழியைக் கூறி எவன் தூற்றுவானோ அவன் நல்லவர்களுடைய பாவத்தைப் பங்கிட்டுக் கொள்ளுகின்றான். பாவம் குறையும் வழி இது'' என்று கூறிவிட்டு அம்முனிவரர் சென்றார்.

இதனை அருகிலிருந்து அரச குமாரி திருஞான சுந்தரி கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்தாள்.

அதுமுதல் அரசன் உண்ணுமலும் உறங்காமலும், தான் செய்த தீவினையை நினைந்து நெஞ்சம் உருகி, முகங் கருகித் துன்பக் கடலில் அழுந்தி துள்ளித் துடித்து, கண்ணீர் வடித்துக் கலங்குவானாயினான். தந்தையின் வருத்தத்தையும், பாவத்தினின்று விடுதலைக்கு வழியையும் தன் மனதில் சிந்தித்தாள் திருஞான சுந்தரி. ஒரு முடிவுக்கு வந்தாள்.

தந்தையைத் தொழுதாள். 'பிதாவே! நீர் வருந்த வேண்டாம். தூயவராம் தங்கள் பாவம் விலகும் நெறியை நான் கண்டுபிடித்து விட்டேன். சில காலம் நான் சொன்னபடி கேட்டு இரும்' என்று கூறினாள்.

அரசாங்கத்தை அமைச்சரிடம் ஒப்புவிக்கச் செய்தாள். ஆயிரக் கணக்கான பேர் நடக்கும் ஒரு வழிக்கரையில் ஒரு சிறு மாளிகையை அமைத்தாள். அதைச் சுற்றி பூச்செடிகளை வளர்த்தாள். அம் மாளிகையில் தந்தையுடன் அவள் தனித்து இருந்தாள்.

மன்னவன் மகளுடன் அம்மாளிகையில் தங்கி இடையறாது தெய்வ சிந்தனையுடன் வந்தனை வழிபாடுகள் புரிந்து வந்தான். ஆயிரக் கணக்கான பேர்கட்கு அன்னமும் சொன்னமும் வழங்கிக் கொண்டு தவ ஒழுக்கத்தில் வாழ்ந்து வந்தான்.

இந்த உலகத்தை நக்கீரர், ''மாயிருள் ஞாலம்'' என்கின்றார். அறியாமையான இருள் சூழ்ந்த உலகம். மக்கள் உண்மையை உணரும் தெருள் இல்லாதவர்கள். அறிவில் மயக்கம் உடையவர்கள். பித்த மயக்கம் உடையவனுக்குச் சர்க்கரை கசக்கும். அதுபோல்

அறிவில் மயக்கம் உடையவர்கட்கு உண்மை பொய்யாகவும் நன்மை தீமையாகவும் காட்சி தரும். கோட்டானுக்குப் பகல் இரவாகக் காட்சி தரும். ஆயிரம் சூரியர்கள் ஒருங்கே உதித்தாலும் குருட்டுக் கண் சூரிய ஒளியை உணராதுதானே. அதுபோல் அறியாமை என்னும் திரையால் மறைக்கப்பட்ட அந்தகர்கள் உண்மை ஞானத்தை உணராது வாய்க்கு வந்ததை வசனிப்பார்கள்.

அந்த வழி போவாரும், வருவாரும் அங்கே யாசிக்கின்றவர்களும், வேந்தனுடைய தூய்மையை அறியாது, பெற்ற பெண்ணைக் காதலித்து, தனிமையில் மகளுடன் இன்பம் நுகர்கின்றான் என்று பழியுரை கூறுவாராயினர்கள்.

தீ விரைவில் பரவும் ஆற்றல் படைத்தது. அதுபோல் தீமையும் விரைவில் பரவும். மகளை மனைவியாகக் கொண்ட மன்னன் என்ற பழிச் சொல் எங்கும் பரவியது.

சில காலத்துக்குப் பின் ஒருநாள் மாலை நேரம். மாளிகையின் முன் மன்னவன் ஆசனத்தின்மீது அமர்ந்திருந்தான். திருஞான சுந்தரி அருகில் அமர்ந்திருந்தாள்.

பலர் வந்து யாசித்தார்கள். அரச குமாரி அன்னமும் ஆடையும் பொன்னும் மணியும் வழங்கினாள். யாசகர்கள் கூட்டம் ஓய்ந்து அமைதி நிலவியது. அப்போது ஒரு கண் தெரியாதவன் மனைவியின் தோள்மீது கையை வைத்துக்கொண்டு வந்தான்.

கண்ணில்லாதவருடைய மனைவி பரம பதிவிரதா சிரோன்மணி. அவள் கணவனைக் கடவுளாகக் கருதி கணவனுக்கு எல்லாப் பணி விடைகளும் புரிந்து வந்தாள். அதனால் அவளிடம் அஷ்டமாசித்திகளும் கைகட்டி வாய்பொத்தி ஏவல் புரிந்தன. அவள் அந்த சித்திகளை வெளிப்படுத்தாது, நீறுபூத்த நெருப்புபோல், கற்பு நெறி வழுவாது, பொறுமையின் சிகரமாய் நின்றாள். அவளுடைய பெருமையை யார் அறிவார்? பெரியவர்கள் தங்கள் பெருமையை, எப்போதுமே இரகசிய இடங்களை உடையால் மறைப்பதுபோல் தங்கள் அரியபெரிய சித்திகளை வெளிக்காட்டாமல் மறைத்து ஒழுகுவார்கள். சிறியவர்கள் சித்தியை வெளிப்படுத்துவார்கள். குழந்தைகள் தம் இரகசிய அங்கங்களை மறைக்காமல் திரியும். பெரியவர்கள் மறைத்து ஒழுகுவார்கள்.

இந்தப் பெரியவர்கள் வரிசையில் முதன்மை பெற்று விளங்குபவர் அந்த அம்மையார். கணவனுடன் யாசிக்க வந்தார். கண் தெரியாத கணவன், "பெண்ணே! இப்போது எங்கே வந்திருக்கின்றோம்" என்று வினவினன்.

அம்மாதரசி, "நமது அரசருடைய மாளிகைக்குமுன் வந்திருக்கின்றோம்" என்றார்.

கண்ணில்லாத அந்த மூடன் "பெண்ணே! பெற்ற மகளை மனைவியாகக் கொண்ட அரசனுடைய மாளிகையா இது?" என்று மெல்லக் கூறினன்.

கற்புக்கரசி கணவனைப் பார்த்து, ''பிராணபதி! நரகவுலகில் இருந்த குதிரை லத்திக் குன்றை, குற்றமற்ற கொற்றவன்மீது பழி யுரைத்த அத்தனை பேரும் ஆளுக்கு ஒரு கவளமாகப் பங்கிட்டுக் கொண்டார்கள். அக்குன்று குறைந்துகொண்டே வந்தது. இன்னும் ஒரு கவளந்தான் மிகுந்திருந்தது. அந்த ஒரு கவளம் உமக்கு உரிய தாகிவிட்டது. நல்லவர்களை அகாரணமாக இகழ்ந்துரை கூறுவோர் நல்லவர்களது பாவத்தைப் பகிர்ந்து கொள்ளுகின்றார்கள். நீர் முடிவில் மிஞ்சியிருந்ததைப் பகிர்ந்து கொண்டீர். என்னே மதி யுடைமை. நீர் எண்ணற்ற பாவத்தால் கண்ணற்றவரானீர். கண் ணுடையவரே உண்மை யுணராது மயங்குகின்றார்கள். பிச்சைக்கு வந்த நீர் வாயைச் சும்மா வைத்துக் கொண்டிருக்கக் கூடாதா? உத்தம நெறியில் நிற்கும் வித்தக மன்னரை இத்தீய வுரையால் பழித்து பாவத்தைப் பகிர்ந்து கொண்டீர். நரகவுலகில் குவிந்திருந்த குதிரை லத்திக் குன்று முழுவதும் கரைந்து மறைந்துவிட்டது'' என்றார்.

இந்த உரையாடலை மன்னவரும் மன்னவருடைய புதல்வியும் உற்றுக் கேட்டார்கள். வேந்தனுடைய உள்ளத்தில் சாந்தம் ஏற் பட்டது. சுமை நீங்கியது. உவகை யுண்டாகியது. 'புனிதனானேன்' என்றார். தன் வினையை விலக்கும் பொருட்டு புதல்வி செய்த தந்தி ரத்தை யறிந்து மகிழ்ந்தார்.

அரச குமாரி அக்கற்புக்கரசியை வணங்கி, மிகுந்த உபசாரம் புரிந்தாள். ''அப்பா! இனி இந்த மாளிகைவாசம் வேண்டாம். புறப் படுங்கள்'' என்றாள். பழைய அரண்மனைக்குத் தந்தையுடன் சென்றாள்.

மன்னவன் மகளைத் தக்க வரனுக்குத் திருமணம் புரிந்துவைத் தார். மருகனிடம் அரசாங்கத்தை ஒப்புவித்துத் தவவனம் புகுந் தார்.

ஆதலால் மகளே! பிறர் குற்றங்குறைகளைக் கூறக்கூடாது. கூறு வோர் வினைக் கூறுகளை யடைகின்றார்கள்'' என்று கூறி முடித்தார் சிவகாமி சுந்தரி.

சந்திரா தாய் கூறிய வரலாற்றைக் கேட்டு உள்ளம் உவந்தாள். அதுமுதல் யாரைப் பற்றியும் பேசுவதில்லை. சந்திரா நற்குணவதி யாக இருந்தாள்.

எனவே பாவம் குறையும் வழி இதனால் உணர்த்தப் பெறு கின்றது.

# மகாபாரதம்

---

## சாந்தி பருவம்

### ஆபத் தருமம்

யுதிட்டிரர், ''பாரதரே! குறைவடைந்தவனும், சோம்பலுள்ளவனும், உறவினரது அழிவின் அச்சத்தால் வெளிவந்து போர் செய்ய முடியாதவனும், மக்களால் வெறுக்கப்பட்டவனும், செல்வம் இல்லாதவனும், பகைவரால் வருத்தம் அடைந்தவனும், வலிமையில்லாதவனுமாகிய ஒருவன் எப்படி நடந்துகொள்ள வேண்டும்?''

பீஷ்மர், ''தருமா! தன்னினும் மேம்பட்ட பொருளும் வலிமையும் உடைய பகைவனுடன் சமாதானம் செய்துகொள்ள வேண்டும். ஆபத்து வரும்போது பொருளேயும் அரசையும் விடுத்துத் தன்னேக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும். தகுதியுள்ளவன் உயிரோடிருந்தால் திரும்பவும் பொருளேயும் அரசாங்கத்தையுந் தேடிக்கொள்ளலாம். எதனே இழந்தாலும் அறிவுள்ளவன் தன்னே யிழக்கக்கூடாது. பொருளும் ஆள் வலிமையும் இல்லாதபோது அறிவின் வலிமையால் வாழவேண்டும்.

அரசனுக்குப் பொருளால் வலிமையும், வலிமையால் பொருளும் விளேகின்றன. வலிமையும் செல்வமும் ஒன்றுக்கொன்று காரணமாக இருக்கின்றன. அரசன் இந்த இரண்டிலும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

எல்லாவித முயற்சிகளும் செய்து கருவூலத்தை வளர்த்துக் கொள்ள வேண்டும். செல்வத்தை யிழப்பது மரணம் போன்றதாகும். உடம்பிலுள்ள இரகசிய அங்கத்தை ஆடை மறைப்பதுபோல், பொருள் மிகுந்தவனுடைய குற்றங்களே அப்பொருள் மறைக்கின்றது.

அயர்ச்சி யடைந்தவன் முயற்சியுள்ளவனுக இருக்க வேண்டும். பாவிகளிடம் உள்ள பொருளேக் கவர்ந்து நல்லவர்கட்கு வழங்க வேண்டும். புகையானது காற்றின் வசமாவதுபோல் தருமமானது வலிமையின் வசமாகின்றது. வலிமையுள்ளவன் எல்லாவற்றையும் சாதித்துவிடுவான். வேதவித்தையை ஆதரவுடன் கற்கவேண்டும். ஆன்ருேரை யடுக்க வேண்டும். அதிகமாகப் பேசாமல் மென்மையாகப் பேசவேண்டும். பிறருடைய குணங்களே மட்டுங் கூற வேண்டும்.

### திருடனும் மேன்மையடைவான்

காபச்யன் என்ற வேடன் காட்டில் வாழ்ந்தான். அவன் கல்வியறிவுடையவன்; சூரன்; நல்லவர்க்கு நலஞ் செய்பவன். அவன் பாரி

யாத்திரமலையில் வேட்டையாடிக் கொண்டு பல கிராமங்களை வென்றான். தாய் தந்தையரை அன்புடன் வழிபட்டு வந்தான். திருட்டுத் தொழிலால் நிரம்பவும் செல்வத்தை யடைந்தான். ஏழைகட்கு உதவி புரிபவன் திருடன், என்று அவனிடம் உதவிபெற மறுப்பவர்கட்கு, அவர்கள் வீட்டில் அவர்கள் அறியாவண்ணம் அன்னம் முதலியவற்றை வைத்துவிட்டு வருவான்.

தனது பணியாட்களைப் பார்த்து "நீங்கள் பெண்களையும் தவ முனிவர்களையும் பயந்தவர்களையுந் துன்புறுத்தக் கூடாது. பசுக்களுக்கும் அந்தணர்களுக்கும் நன்மை செய்ய வேண்டும்" என்று கட்டளையிட்டான். அவர்கள் அவனுடைய கட்டளையை நிறைவேற்றினர்கள். முடிவில் காபச்யன் நற்கதியடைந்தான்.

## மூன்று மீன்களின் கதை

அரசன் ஆபத்து நேரங்களில் வருமுன் காத்துக்கொண்டு, சமயோசித புத்தியுடன் நடந்துகொள்ள வேண்டும். இதுபற்றி ஒரு கதை கூறுகின்றேன்; கேள். அதிக மேடில்லாத இடத்தில் ஒரு குட்டை யிருந்தது. அதில் மூன்று மீன்கள் இருந்தன. ஒரு மீன் தீர்க்கதரிசி. ஒன்று சமயோசித புத்தி படைத்தது. ஒன்று மந்த புத்தி படைத்தது. இவைகள் ஒற்றுமையாய் அக்குட்டையில் சுகமாக வாழ்ந்து கொண்டிருந்தன.

மீன் பிடிப்பவர்கள் ஒருநாள் வந்து குட்டையைப் பல வழிகளாலும் வடிய வைத்தார்கள். அதனால் தண்ணீர் குறைவடையலாயிற்று. நீண்ட ஆலோசனையுள்ள தீர்க்கதரிசி யென்ற மீன், தனது நண்பர்களான மற்ற இரண்டு மீன்களையும் பார்த்து, "நண்பர்களே! இந்தக் குட்டையில் நீர் குறைகின்றது. நாம் நீரை ஆதாரமாகக் கொண்டு வாழ்பவர்கள். நீர் வற்றினால் நம் வாழ்க்கை முடிந்துவிடும். வாய்க்காலின் நீர் வற்றுவதற்கு முன் நாம் விரைந்து வேறிடத்துக்குப் போய் விடுவோம். வருமுன் துன்பத்தைத் தடுத்துக் கொள்வது அறிவுடைமையாகும். ஆதலால் புறப்படுங்கள். ஆபத்தில்லாத வேறிடத்துக்குப் போவோம்" என்றது.

சமயோசித புத்தி படைத்த மீன் "நண்ப! ஆபத்து வரும்போது அறிவைப் பயன்படுத்தித் தப்பித்துக் கொள்ளலாம்" என்றது. மந்த புத்தி படைத்த மீன் "ஏன் இந்த பரபரப்பு. நாளை மறுநாள் மழை வரக்கூடும். குட்டை நிரம்பிவிடவுங் கூடும். அவசரப்படவேண்டாம்" என்றது.

தீர்க்கதரிசி என்ற மீன் மட்டும் வாய்க்கால் வழியே சென்று ஆழமுள்ள மற்றொரு குளத்தை யடைந்தது. மறுநாள் மீன் பிடிப்பவர்கள் வந்து, நீர் வடிந்திருப்பதைக் கண்டு மீன்களைப் பிடிக்கத் தொடங்கினர்கள். தண்ணீரைக் கலக்கி மீன்களைப் பிடித்துக் கயிற்றில் கோத்தார்கள். மந்தபுத்தி படைத்த மீன் அவர்கள் கையில் சிக்கிக்

கொண்டது. சமயோசித புத்தி படைத்த மீன் படக்கென்று தானே போய் அந்தக் கயிற்றை வாயால் கவ்விக் கொண்டது.

செம்படவர்கள் மீன்களைக் கோத்த கயிற்றைத் தூக்கிக்கொண்டு போய் ஆழமான மற்றொரு குளத்தில் மீன்கள் மீது படிந்துள்ள சேற்றைக் கழுவினார்கள். சமயோசித புத்தி படைத்த மீன் மெல்ல நீருக்குள் சென்று தப்பிப் பிழைத்தது. மந்த புத்தி படைத்த மீன் மாண்டு ஒழிந்தது.

ஆதலால் தாமச புத்தியுள்ளவன் அழிந்துவிடுவான். சமயோசித புத்தியுள்ளவன் ஆபத்து நேர்ந்தபோது தன் அறிவால் அதை விலக்கிக்கொள்ளுவான். இடர்ப்பாடு வருவதற்கு முன்னரேயே தன் நுண்ணறிவால் அறிந்து முன்னெச்சரிக்கையாக அதினின்றும் விலகி வாழ்பவன்தான் உத்தமன்.

காலம் என்பது லவம், க்ஷணம், காஷ்டை, கலை, முகூர்த்தம், பகல், இரவு, வாரம், பட்சம், மாதம், ருது, ஆண்டு என்ற பிரிவுகளுடன் கூடியது. காலமறிந்தும், இடமறிந்தும் அறிஞன் துன்பத்தை விலக்கி வாழவேண்டும்'' என்றார்.

## பகைவனிடம் நடந்துகொள்ளும் பண்பு

தருமர், ''பரதகுல மாணிக்கமே! அறம் உரைப்பதில் வல்லவராகிய உம்மை மறுபடியும் வினவுகின்றேன். பல பகைவர்களால் சூழப்பட்ட அரசன் உய்யும் வழி யாது? நண்பனையும் பகைவனையும் எப்படி அறிய வேண்டும். நண்பனுக்கும் பகைவனுக்கும் நடுவில் நாம் எப்படி நடக்க வேண்டும்? எவனிடம் போர் புரியவேண்டும்? எவனிடம் சமாதானஞ் செய்து கொள்ளவேண்டும்? வலிமையுள்ளவனாக இருந்தாலும் பகைவர்களின் நடுவில் இருப்பவன் எவ்விதம் இருக்கவேண்டும்? தாங்கள்தான் இதனை உண்மையாகவும் விளக்கமாகவும் உரைக்க வல்லவர். பொறிபுலன்களை வென்ற சத்திய சந்தராகிய உம்மைத் தவிர இதைச் சொல்லத் தக்கவர் ஒருவருமில்லை. தாங்கள் இந்தக் கருத்துக்களை உபதேசிக்க வேண்டும்'' என்று கேட்டார்.

பீஷ்மர், ''தருமநந்தனா! நீ வினவிய வினாக்கள் அவசியம் அறியத் தக்கவை. ஆபத்து நேரங்களுக்குரிய இரகசியங்களைக் கூறுகின்றேன். கவனமாகக் கேள். நண்பன் பகைவனாவான். பகைவனும் நண்பனாவான். மனித மனம் மாறுபாடு அடையத் தக்கது நம்பவும் வேண்டும். போர் புரியவும் வேண்டும். இடத்தையுங் காலத்தையும் நன்கு அறிந்து கொண்டு, செய்யத்தக்கது, செய்யத் தகாதது என்பவற்றை நிச்சயம் செய்துகொண்டு நடக்கவேண்டும். உயிரைக் காக்க வேண்டிப் பகைவர்களிடத்திலும் சந்தி செய்துகொள்ள வேண்டும். எவன் காரிய சித்தியைக் கருதி பகைவனுடன் நட்பும், நண்பனிடம் பகையும் செய்கின்றானோ அவன் மிகப் பெரிய பயனை

அடைவான். இதுபற்றி ஒரு இனிய வரலாற்றைக் கூறுகின்றேன். கேள்.

## எலியும் பூனையும்

ஒரு பெரிய கானகத்தில் வானமளாவிய பெரிய ஆலமரமிருந்தது. அதில் பல கொடிகள் படர்ந்திருந்தன. குளிர்ந்த நிழலுள்ள அதில் பல பறவைகள் வாழ்ந்து கொண்டிருந்தன. அந்த ஆலமரத்தின் அடியில் நூறு தொளைகளுடன் கூடிய வளையைச் செய்து கொண்டு 'பலிதம்' என்ற ஒரு அறிவுள்ள எலி வாழ்ந்து கொண்டிருந்தது. பல வுயிர்களைக் கொன்று தின்னும் 'லோமசம்' என்ற பூனை மரத்தின் கிளையில் வாழ்ந்து கொண்டிகுந்தது.

காட்டில் குடியிருந்த ஒரு கொடியவன் நாள்தோறும் பொழுது போனவுடன் அம்மரத்தடியில் விலங்கு முதலியவற்றைப் பிடிப்பதற்குரிய பொறியை வைப்பான். நரம்புகளால் செய்யப்பட்ட சுருக்கு வலையை வைத்துவிட்டுத் தன் வீட்டில் இரவில் நன்கு தூங்குவான். பொழுது விடிந்தபின் வந்து வலையில் அகப்பட்ட விலங்குகளைக் கொண்டுபோய் உண்டு மகிழ்வான்.

ஒருநாள் இரவில் பொறியில் வைத்திருந்த இறைச்சியைத் தின்னும் பொருட்டுச் சென்ற அப் பூனை அப்பொறியில் சிக்கிக் கொண்டது. வலிமையும், பகையும், தன்னை எப்போதும் கொல்லும் முயற்சியும் உடைய பூனை கட்டுப்பட்டிருப்பதை யறிந்த பலிதம் என்ற எலி அச்சமின்றி அங்கு உலவியது. பொறிக்குள்ளிருந்த இறைச்சியைக் கண்டு மகிழ்ந்தது. தன் பகையாகிய பூனைக்கு மேலாக அந்த யந்திரத்தின் மீதேறி அமர்ந்து இறைச்சியைத் தின்னத் தொடங்கிற்று.

எலிக்கு மற்றொரு பகையாளியானதும் அச்சத்தைத் தருவதுமாகிய ''அரிகம்'' என்ற ஒரு கீரிப்பிள்ளை எலியைக் கொல்ல வந்து கொண்டிருந்தது. அந்தக் கீரிப்பிள்ளை உணவுக்காக வாயை நக்கிக் கொண்டும் முகத்தை உயரத் தூக்கிக்கொண்டும் பூமியில் நின்றது. இதைக் கண்ட எலி நடுங்கி மரத்தில் ஏறலாம் என்று எண்ணியது. மரப்பொந்தில் ''சந்திரகன்'' என்ற பேருள்ள கோட்டான் எலியைக் கொல்ல எதிர்பார்த்துக் கொண்டிருந்ததைக் கண்டது. ஒரு புறம் கீரி. மற்றொரு புறம் கோட்டான். இரு பகைவருக்கிடையில் எலி அச்சத்தால் நடுக்கமுற்றது. நாற்புறத்தும் தகையப்பட்ட எலி ஆராயத் தொடங்கியது.

நமக்கு நாலு பக்கங்களிலும் ஆபத்து சூழ்ந்திருக்கின்றது. உயிர் வாழ்வது சந்தேகத்துக்கு இடமான நெருக்கடியில் நான் அகப்பட்டிருக்கின்றேன். வேகமாகப் பூமியில் சென்றால் கீரிப்பிள்ளை [என்னைப் பிடிக்கும். மரத்தில் ஏறினல் கோட்டான் என்னைக் கொல்லும். அறிவினல் ஆபத்தை அகற்றவேண்டும். மூச்சு அடங்குகின்ற வரை வாழ்வதற்கு முயற்சி செய்வேன். அறிவும், நீதி நூல்களில் திறமை

யும் உடையவன் பெரிய ஆபத்தில் முழுகமாட்டான். இப்போது இந்த ஆபத்தில் பூனையைவிட வேறு கதி காணேன். பகையாகிய பூனை ஆபத்தில் அகப்பட்டுக் கொண்டிருக்கின்றது. என் உதவி இதற்கு வேண்டியுளது. மூன்று பகைவர்களால் கொல்லப்பட இருக்கும் நான் இப்போது என் உயிரைக் காக்கும் நல்வழியைச் சிந்திக்க வேண்டும். உயிரை வேண்டி இந்தப் பூனையையே நண்பனாக அடுக்க வேண்டும். பூனைக்கு நேர்ந்துள்ள துயரத்தைக் களைந்தால் அதன் உதவி எனக்குக் கிடைக்கும். சங்கட காலத்தில் சிறியவனை யும் மதித்து நட்பு செய்யலாம் என்று பெரியோர்கள் கூறுகின்றார் கள். பகைவன் அறிஞனாயின் அவனே சிறந்தவன்; நண்பனாயினும் மூடனாக இருப்பானாயின், சிறந்தவனாக மாட்டான். பகைவனாயினும் பூனையிடந்தான் எனக்கு வாழ்வு அமைந்திருக்கின்றது, ஆதலால் பூனைக்கு அறிவுரை கூறி அதன் மனதை மாற்றி அதை வாழ்வித்து, நானும் வாழ்வேன்'' என்று எலி எண்ணியது.

இவ்விதம் பகைவரது நடையையும் ஒற்றுமை வேற்றுமைகளை யும் காலத்தையும் இடத்தையும் நன்கு அறிந்த எலி பூனையைப் பார்த்துச் சொல்லத் தொடங்கிற்று.

''பூனையே! நட்பினால் உன்னை நோக்கிச் சொல்லுகின்றேன். நீ உயிரோடிருக்கின்றாயா? நீ உயிருடன் வாழ்வதை நான் விரும்பு கின்றேன். நன்மையென்பது நம்மிருவருக்கும் பொதுவன்றோ? உனக்கு அச்சம் வேண்டாம். உன்னை இந்த ஆபத்திலிருந்து நான் விடுவிப்பேன். உனக்கும் எனக்கும் நன்மையை நான் அறிவினால் கண்டுபிடித்திருக்கின்றேன். இந்தக் கோட்டானும் கீரியும் என்னைக் கொல்ல முயலுகின்றன. கயிறுகளை நீயே அறுத்துக் கொள்ள முடியாது. நீ என்னைக் கொல்லுவதில்லை என்ற உறுதியைக் கொள் வாயாயின் நான் கயிறுகளை யறுத்து உன்னைக் காப்பாற்றுவேன். நீ மரத்தின் முடியில் வாழ்கின்றாய். நான் மரத்தின் அடியில் வாழ் கின்றேன். நம்பிக்கையும் சில சமயத்தில் கேடு பயக்கும்; நம்பிக்கை யில்லாமையும் சில சமயத்தில் கேடு பயக்கும். நமக்குள் அன்பு வளர்வதாக. நட்பு உண்டாகட்டும். காலந்தவறிச் செய்யும் செயல் களைப் பெரியோர்கள் கொண்டாடுவதில்லை. உன்னால் எனக்கு நன்மையும், என்னால் உனக்கு நன்மையும் உண்டாகும் காலம் இது. ஒருவன் கட்டையைக் கொண்டு ஆழமான நதியைக் கடக்கின்றான். அந்தக் கட்டை அவனால் நதியைக் கடக்கின்றது. இதுபோன்றது நம்மிருவருக்கும் உள்ள காரியம். நான் இப்போது வலையை என் கூரிய பற்களால் அறுத்து உன்னை விடுவிப்பேன். நீயும் என்னைப் பகைத் துயரிலிருந்து விடுவிப்பாய்'' என்று அறிவு நிறைந்த வசனத் தைக் கூறியது.

(தொடரும்)

உ

ஓம் குஹாய நம:



# திருப்புகழமிர்தம்



"குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ருள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்''

மலர் 33 | கீலக ஹூ—புரட்டாசி மீ செப்டம்பர் 1968 | இதழ் 6

## திருப்புகழ்

பரிமள மிகவுள சாந்து மாமத
முருகவிழ் வகைமலர் சேர்ந்து கூடிய
பலவரி யளிதுயில் கூர்ந்து வானுறு முகில்போலே
பரவிய இருள்செறி கூந்தல் மாதர்கள்
பரிபுர மலரடி வேண்டி யேவிய
பணிவிடை களிலிறு மாந்த கூளனை நெறிபேணு

விரகனை யசடனை வீம்பு பேசிய
விழலனை யுறுகலை யாய்ந்தி டாமுழு
வெகுளியை யறிவது போங்க பாடனை மலமாறு
வினையனை யுரைமொழி சோர்ந்த பாவியை
விளிவுறு நரகிடை வீழ்ந்த மோடனை
வினவிமு னருள்செய்து பாங்கிளுள்வது
மொருநாளே

கருதலர் திரிபுர மாண்டு நீறெழ
மலைசிலை யொருகையில் வாங்கு நாரணி
கழலணி மலைமகள் காஞ்சி மாநக ருறைபேதை
களிமயில் சிவனுடன் வாழ்ந்த மோகினி
கடலுடை யுலகினை யீன்ற தாயுமை
கரிவன முறையகி லாண்ட நாயகி யருள்பாலா

1356—1

முரணிய சமரினில் மூண்ட ராவண
　னிடியென அலறிமு னேங்கி வாய்விட
　முடிபல திருகிய நீண்ட மாயவன் 　　மருகோனே
முதலொரு குறமகள் நேர்ந்த நூலிடை
　யிருதன கிரிமிசை தோய்ந்த காமுக
　முதுபழமறைமொழியாய்ந்ததேவர்கள்பெருமாளே.

### பதவுரை

கருதலர்=பகைவர்களுடைய, திரிபுரம் மாண்டு நீறு எழ=முப்புரங்கள் அழிந்து தூளாகுமாறு, மலை சிலை=மேருமலையை வில்லாக, ஒரு கையில் வாங்கும்=ஒரு கையில் வளைத்த, நாரணி=குளிர்ச்சியுடைய தேவியும், கழல் அணி மலைமகள்=சிலம்பு அணிந்த மலைமகளும், காஞ்சி மாநகர் உறை பேதை=பெருமை பொருந்திய காஞ்சிபுரத்தில் வீற்றிருக்கும் காமாட்சியும், களிமயில்=மகிழ்ச்சியுடைய மயில் போன்றவளும், சிவன் உடன் வாழ்ந்த மோகினி=சிவபெருமானுடன் வாழும் அழகியும், கடல் உடை உலகினை ஈன்ற தாய்=கடலை ஆடையாகவுடைய உலகை ஈன்ற அன்னையும், உமை=உமாதேவியும், கரிவனம் உறை=திருவானைக்காவில் வாழ்கின்ற, அகில அண்டநாயகி=அகிலாண்டநாயகியுமாகிய எம்பெருமாட்டி, அருள் பாலா=பெற்ற பாலகரே! முரணிய சமரினில்=மாறுபட்ட போரில், மூண்ட ராவணன்=முற்பட்டு வந்த இராவணன், இடி என அலறி=இடியைப் போன்ற ஓசையுடன் அலறியும், முன் ஏங்கி வாய்விட=அதன் முன்பு கவலைப்பட்டும் வாய்விட்டு அழ, முடிபல திருகிய=அவனுடைய பல தலைகளையும் அறுத்துத் தள்ளிய, நீண்ட மாயவன்=நீண்ட திருமேனியுடைய திருமாலின், மருகோனே=திருமருகரே! முதல் ஒரு குறமகள்=முன்பு ஒப்பற்ற குறமகளாகிய வள்ளியம்மையின், நேர்ந்த நூல் இடை=நுண்ணிய நூல்போன்ற இடைமீதும், இருதன கிரிமிசை=இரண்டு கொங்கையாம் மலைகள் மீதும், தோய்ந்த காமுக=முழுகிய விருப்பமுடையவரே! முது பழ மறை மொழி ஆய்ந்த=மிகவும் பழமையான வேதவாக்கியங்களை ஆராய்ந்துள்ள, தேவர் பெருமாளே=தேவர்கள் போற்றும் பெருமையில் சிறந்தவரே! பரிமள மிக உள சாந்து=நறுமணம் மிகவும் உடைய சந்தனம், மாமதம்=கஸ்தூரி, முருகு அவிழ் வகைமலர்=வாசனை வீசும் நல்ல மலர்கள், சேர்ந்து கூடிய=இவைகள் பொருந்திக் கூடின, பல வரி அளி துயில் கூர்ந்து=பல ரேகைகள் கொண்ட வண்டுகள் தூங்குவதும், வான் உறு முகில் போல=ஆகாயத்தில் உள்ள மேகம் போன்றதும், பரவிய இருள்நெறி=பரந்துள்ள இருள் நிறைந்ததுமான, கூந்தல் மாதர்கள்=கூந்தலையுடைய மாதர்களின், பரிபுர

மலர் அடி வேண்டி=சிலம்பணிந்த மலர் போன்ற பாதங்களை விரும்பி, ஏவிய பணிவிடைகளில்=அம்மாதர்கள் இட்ட வேலைகளை பணியாளாகச் செய்வதில், இறுமாந்த கூளன்=ஒரு பெருமையாகக் கொண்ட பயனற்றவனை, நெறி பேணு=ஒழுக்கமுறையை விரும்பி மேற்கொள்ளாத, விரகனை=தந்திரசாலியை, அசடனை=மூடனை, வீம்பு பேசிய விழலனை=வீண்புகழ்ச்சி பேசுகின்ற உதவாக்கரையை, உறுகலை ஆய்ந்திடா=உள்ள கலைநூல்களை ஆராய்ந்து அறியாத, முழு வெகுளியை=முழு கோபக்காரனை, அறிவு அது போம் கபாடனை=அறிவை ஓடிப்போகுமாறு தப்பவிட்ட காவலாளனை, மலம் மாறு வினையனை=மும்மலங்கள் நீங்காத தீவினையாளனை, உரை மொழி சோர்ந்த பாவியை=சொல்லும் சொல் தவறிய பாவியை, விளிவு உறு நரகு இடை வீழ்ந்த மோடனை=இறந்து சேரும் நரகத்திடை விழுந்த மூடனை, வினவி=இப்படிப்பட்ட என்னை எங்குளான் என்று வினவி, முன் அருள் செய்து=முன்னதாக உமது திருவருளைப் பாலித்து, பாங்கின் ஆள்வதும் ஒருநாளே=நன்கு ஆட்கொள்ளும் காலமும் ஒன்று உண்டாகுமோ?

## பொழிப்புரை

பகைவர்களுடைய திரிபுரங்கள் அழிந்து பொடியாகும்படி, மேருமலையை ஒரு கையில் வில்லாக வளைத்த நாரணியும், சிலம் பணிந்த மலைமகளும், காஞ்சி மாநகரில் எழுந்தருளிய காமாட்சியம்மையும், இன்பம் நிறைந்த மயில் போன்றவளும், சிவபெருமானுடன் வாழும் அழகியும், கடலை ஆடையாகவுடைய உலகையீன்ற அன்னையும், உமா தேவியும், திருவானைக்காவில் வீற்றிருக்கும் அகிலாண்டநாயகியும் ஆகிய எம்பிராட்டியின் திருக்குழந்தையே! மாறுபட்ட போரில் முற்பட்டெழுந்த இராவணன், இடிபோன்ற ஓசையுடன் அலறியும், கவலைப்பட்டும் வாய்விட்டு அழுதும் விழுமாறு அவனுடைய பல தலைகளையும் அறுத்துத் தள்ளிய நீண்ட திருமாலின் திருமருகரே! ஒப்பற்ற வள்ளி பிராட்டியின் நுண்ணிய நூல் போன்ற இடைமீதும், இரண்டு மலை போன்ற தனங்கள் மீதும் தோய்ந்த விருப்பம் உடையவரே! மிகப் பழமையான வேத மொழிகளை ஆராய்ந்து அறிந்த தேவர்கள் போற்றும் பெருமித முடையவரே! நறுமணம் மிகவும் உடைய சந்தனம், கஸ்தூரி, வாசனை வீசும் நல்ல மலர்கள் இவைகளில் பொருந்திய, பல ரேகைகளைக் கொண்ட வண்டுகள் துயில் புரிவதும், ஆகாயத்தில் உள்ள மேகம் போன்றதும், பரந்த இருள் போன்றதும் ஆகிய கரிய கூந்தலையுடைய பொது மாதர்களின் சிலம்பணிந்த மலர் போன்ற பாதங்களை விரும்பி. அவர்கள் இட்ட வேலைகளைச் செய்வதில் பெருமைப்படும் வீணனும், ஒழுக்க நெறியை மேற்கொள்ளாத தந்திரக்காரனும், வீண் புகழ் பேசும் உதவாக்கரையும்,

அறிவு நூல்களை ஆராய்ந்து அறியாத பெருங்கோபக்காரனும், அறிவைத் தப்பிப்போகும்படி விட்ட காவல்காரனும், மும்மலங்கள் நீங்காத தீவினையாளனும், சொல்லும் சொல சோர்வுபட்ட பாவியும், இறந்து சேரும் நரகத்தில் விழுந்த மூடனும் ஆகிய அடியேனை, இவன் எங்கே? என்று கேட்டு, எளியேன் கடைத்தேறுமாறு உமது திருவருளைப் பாலித்து, நன்கு ஆண்டருளும் ஒரு நாள் எனக்கு உண்டாகுமோ?

## விரிவுரை

**பரிமள மிகவுள சாந்து :—**

சாந்து—சந்தனம்.

புனுகு ஜவ்வாது அரகஜா பன்னீர் முதலிய வாசனைப் பண்டங்களுடன் கூடிய சந்தனம்.

**மாமதம் :—**

மா—மிருகம். மான்மதமாகிய கஸ்தூரி. இது சிறந்த வாசனைப்பண்டம்.

**பலவரியளிதுயில் கூர்ந்து :—**

வரிகள் பலவுடைய வண்டுகள் கூந்தலில் உள்ள மலர்களின் தேனில் மொய்த்து, தேனையுண்டு, உண்ட மயக்கத்தால் அக்கூந்தலிலேயே உறங்கிவிடுகின்றன.

அந்த வண்டு போல் மண்டுவாகிய காமுகன் மாதர்களின் கூந்தலில் மயங்கி அறிவிழந்து அறியாமையில் உறங்கிவிடுகின்ருன் என்பது குறிப்பு.

**ஏவிய பணிவிடைகளிலிறு மாந்த கூளன் :—**

விலை மாதர்கள் இட்ட ஏவலைச் செய்து, அதனை ஒரு பெருமையாக எண்ணி மகிழ்ந்திருப்பர் காமுகர்.

"மாதரிட்ட தொழில் தனிலுழலு மசடனை"

—(குமரகுருபரமுருக) திருப்புகழ்.

**நெறிபேணு விரகனை :—**

ஆன்ம ஈடேற்றத்துக்குரிய ஞானநெறி இது என்று தெரிந்து, அதனை விரும்பாத தந்திரக்காரன். விரகன்—உபாயக்காரன்.

**வீம்பு பேசிய விழலனை :—**

வீம்பு—தற்புகழ்ச்சி. கர்வத்தினால் தன்னைத்தானே புகழ்ந்து பேசித் திரிவர் பலர். அவர்கள் ஒன்றுக்கும் உதவாதவர்கள்.

உறுகலை ஆய்ந்திடா முழு வெகுளியை :—

நீதி நெறிகளுடன் கூடிய அறிவு நூல்களை ஆராய்ந்து அறியாத பெருங்கோபக்காரன்.

மனிதர்கள் புரியும் பிழைகள் பல. கொலை, புலை, களவு, சூது, பிறன்மனை நயத்தல் கள் குடித்தல். இப்படிப்பட்ட பிழைகளைக் காட்டிலும் தலையாய பிழை ஒன்றுள்ளது. அது எது? கற்க வேண்டிய அறிவு நூல்களைக் கல்லாமையே யாகும். ஆதலால் பட்டினத்தடிகளார் 'கல்லாப் பிழையும்'' என்று முதலில் வைத்துக் கூறுவாராயினர்.

அறிவது போங் கபாடனை :—

ஆன்மாவுக்கு உறுதுணையாக நின்று என்றும் உதவும் அறிவைப் போகுமாறு விட்ட காவலாளி. கபாடம்—தாள்.

கபாடனை என்ற சொல்லை கபடன் என்றும் கொண்டு, வஞ்சனைக்காரன் என்று கூறினும் பொருந்தும்.

விளிவுறு நரகிடை வீழ்ந்த மோடனை :—

பாவஞ் செய்தோர் இறந்தபின் ரௌரவம் முதலிய நரகில் வீழ்ந்து பெருந்துன்பத்தையடைவார்கள்.

எமதூதர்கள் பாவிகளை வறுத்த மணலில் சொருகியும், கொதிக்கின்ற எண்ணெயில் இட்டும், நச்சுக் கிருமிகள் நிரம்பிய குழியில் அமுத்தியும், செக்கில் இட்டு அரைத்தும், காய்ந்த செப்புப் பாவையைத் தழுவச் செய்தும், தசைகளை அறுத்துத்தின்னும் படி வருத்தியும், கண்ணிலும் வாயிலும் இரும்பை உருக்கி வார்த்தும் வேதனைப்படுத்துவர்.

புவனத் தொருபொற் றொடிசிற் றுதரக்
கருவிற் பவமுற் றுவிதிப் படியிற்
புணர்துக் கசுகப் பயில்வுற் றுமரித் திடிலாவி
புரியட் டகமிட் டதுகட் டியிறுக்
கடிகுத் தெனஅச் சம்விளைத் தலறப்
புரள்வித் துவருத் திமணற் சொரிவித் தனலூடே
தவனப் படவிட் டுயிர்செக் கிலரைத்
தணிபற் களுதிர்த் தெரிசெப் புருவைத்
தழுவப் பணிமுட் களில்கட் டியிசித் திடவாய்கண்
சலனப் படஎற் றியிறைச் சியறுத்
தயில்வித் துமுரித் துநெரித் துளையத்
தளையிட் டுவருத் தும்யமப் ரகரத் துயர்தீராய்
—திருப்புகழ்.

**வினவிமு னருள் செய்து பாங்கி னுள்வது மொருநாளே :—**

"இத்தகைய தியேனைத் தேவரீர்! இவன் எங்கே? என்று கேட்டு அருள் செய்து, உமது திருவருளால் சாத்தருளும் நாள் ஒன்று எனக்கு உண்டாகுமோ?" என்று அருணகிரிப்பெருமான் இறைவனிடம் கல்லுங்கரைய, இரும்பும் உருக முறையிடுகின்றார்.

**கருதலர் திரிபுரம் மாண்டு நீறெழ மலைசிலை ஒருகையில் வாங்குநாரணி :—**

தேவர்கள் திரிபுரத்தை அழிக்குமாறு சிவபெருமானுக்கு மேருமலையை வில்லாகத் தந்தார்கள்.

சிவபெருமான் மாதொருகூறன். இடப்பாகம் உமையவளுடையது. வில்லைத் தாங்கிய கை இடக்கை அது உமையம்மையின் திருக்கரம். ஆதலால் மேருமலையை வில்லாக வளைத்தவர் பார்வதி தேவியார் என்று இங்கே கூறியருளினார். வாங்குதல்—வளைத்தல்.

"...........வாங்கியன பூங்கமலக்
கையாலும் ஒரு சாபம் காலாலும் ஒரு சாபம்"
—வில்லிபாரதம் 12ம் போர் (1)

நாரம்—அன்பு. அன்பைப் பூண்டவள் நாரணி.

**கழலணி மலைமகள் :—**

கழல்—சிலம்பு.

இமவான் செய்த தவத்தின் காரணமாக உமாதேவியார் மானச வாவியில் தாமரைக் கமலத்தில் இளங்குழவியாகத் தோன்றி அவனால் வளர்க்கப் பெற்றனர்.

**காஞ்சிமாநகர் உறை பேதை :—**

முத்தித்தலம் ஏழனுள் முதன்மை பெற்ற காஞ்சி மாநகரில் அம்பிகை தவம் புரிந்து இறைவனுடைய இடப்பாகம் பெற்றாள்.

க ம அ ஆட்சி—காமாட்சி.

அயன் அரி அரன் என்ற மும்மூர்த்திகளையும் தமது திருக்கண்களில் தோற்றுவித்தவர். ஆதலால் காமாட்சி எனப்பேர் பெற்றனர். சக்தி பீடங்களில் சிறந்தது காமகோடிப் பீடம்.

**கடலுடை யுலகினை யீன்ற தாயுமை :—**

இந்தப் பூதலம் கடலையாடையாக உடுத்து அணி செய்கின்றது.

"பாய்திரை யுடுத்த ஞாலம்" —கல்லாடம்.

உலகங்களை யெல்லாம் தன் சங்கல்பத்தால் பெற்றெடுத்த தாய் பார்வதி.

"அகிலாண்ட கோடியீன்ற அன்னையே பின்னையுங்
கன்னியென மறைபேசும் ஆனந்தரூப மயிலே" —தாயுமானுர்.

**கரிவன முறை யகிலாண்டநாயகி:—**

கரிவனம்—திருவானைக்கா.

இத்திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள தேவி அகிலாண்ட நாயகி.

மிகவும் அருள் திறம் அமைந்த தேவி. இப்பிராட்டி மிகவும் கெம்பீரமான அருட் காட்சி தந்து அடியவர்களின் அல்லல் தீர்த்து நல்லருள் புரிபவள்.

காளமேகத்துக்குக் கருணை புரிந்தவள்.

இத்தேவிக்கு ஆதிசங்கரர் செய்து அமைத்த ஸ்ரீசக்கரம் பொறித்த தாடங்கம் மிகவும் சிறப்பாக அமைந்துளது.

மகாவித்வான் மீனுக்ஷிசுந்தரம் பிள்ளை அவர்கள் இயற்றிய அகிலாண்டநாயகி பிள்ளைத்தமிழ், அகிலாண்டநாயகி மாலை முதலிய பிரபந்தங்கள் மிகவும் இனிமை வாய்ந்தவை.

**நீண்ட மாயவன்:—**

மாவலியின்பால் மூவடி யாசித்து, உலகத்தை ஓரடியாக அளக்கும் பொருட்டு மூதண்டகூட முகடு முட்டத் திருமால் விசுவரூபம் எடுத்து நின்ருர்.

**முதுபழ மறைமொழி:—**

வேதம் அநாதி, ஆதலால் காலத்தால் கட்டுப்படாதது.

மறை—அநேக நுண் பொருள்கள் இலை மறை காய் போல் மறைந்திருப்பதனுல் வேதம் மறையெனப்பட்டது.

## கருத்துரை

தேவர் போற்றும் திருமுருகேசா! அடியேனை ஆட்கொண்டருளும்.

## திருப்புகழ்

வேலைப் போல்விழி யிட்டும ருட்டிகள்
காமக் ரோதம்வி ளைத்திடு துட்டிகள்
வீதிக் கேதிரி பப்பர மட்டைகள் முலையானை
மேலிட் டேபொர விட்டபொ றிச்சிகள்
மார்பைத் தோளைய சைத்துநடப்பிகள்
வேளுக்காண்மைசெலுத்துசமர்த்திகள் களிகூருஞ்

சோலைக் கோகில மொத்தமொ ழிச்சிகள்
காசற் றுரையி தத்திலொ ழிச்சிகள்
தோலைப் பூசிமி னுக்கியு ருக்கிகள் எவரேனும்
தோயப் பாயல ழைக்கும வத்திகள்
மோகப் போகமு யக்கிம யக்கிகள்
சூறைக் காரிகள் துக்கவ லைப்பட லொழிவேனோ

காலைக் கேமுழு கிக்குண திக்கினில்
ஆதித் யாயஎ னப்பகர் தர்ப்பண
காயத் ரீசெப மர்ச்சனை யைச்செயு முனிவோர்கள்
கானத் தாசிர மத்தினி லுத்தம
வேள்விச் சாலைய ளித்தல்பொ ருட்டெதிர்
காதத் தாடகை யைக்கொல்க்ரு பைக்கடல்
மருகோனே

ஆலைச் சாறுகொ தித்துவ யற்றலை
பாயச் சாலித ழைத்திர தித்தமு
தாகத் தேவர்கள் மெச்சிய செய்ப்பதி யுறைவேலா
ஆழித் தேர்மறு கிற்பயில் மெய்த்திரு
நீறிட் டான்மதில் சுற்றிய பொற்றிரு
ஆனைக் காவினி லப்பர்ப்ரி யப்படு பெருமாளே.

## பதவுரை

காலைக்கே முழுகி=காலையில் நீராடி, குண திக்கினில்=கீழ்த் திசையை நோக்கி, "ஆதித்யாய" என பகர்="ஆதித்யாய" என்று சூரிய மூர்த்தியின்மீது துதிமொழிகளைக் கூறி, தர்ப்பணம்=தர்ப் பணம், காயத்ரீ செபம்=காயத்திரி செபம், அர்ச்சனையை செயும்= அர்ச்சனை முதலியன செய்யும், முனிவோர்கள்=தவ முனிவர்கள் வாழும், கானத்து ஆச்சிரமத்தினில்=காட்டில் உள்ள ஆசிரமத்தில் நடைபெற்ற, உத்தம வேள்வி சாலை அளித்தல் பொருட்டு=உத்தம மான யாகசாலையை இடர் இன்றி காப்பாற்றும் பொருட்டு, எதிர்= எதிர்த்து வந்த, காத தாடகையை கொல்=கொடியவளாகிய தாட கையைக் கொன்றருளிய, க்ருபை கடல் மருகோனே=கருணைக் கட லாகிய ஸ்ரீராமருடைய திருமருகரே! ஆலை சாறு கொதித்து=கரும் பாலைகளின் சாறு கொதித்து, வயல் தலைபாய=வயலிடத்தே பாய்வ தனால், சாலி தழைத்து=நெற்பயிர் தழைத்து, இரதித்து=சுவை மிகுந்து, அமுது ஆக=அமுதம்போல் இனிமையுடையதாக விளங்க,

தேவர்கள் மெச்சிய = தேவர்கள் புகழ்ந்து கூறுகின்ற, செய்பதி உறை வேலா = வயலூரில் வாழ்கின்ற வேலாயுதக் கடவுளே! ஆழி தேர் = சக்கரங்களையுடைய தேர், மறுகில் பயில் = வீதியில் உலாவுகின்றதும், திருநீறு இட்டான் மதிள் சுற்றிய = திருநீறிட்டான் திருமதில்களால் சூழப்பெற்றதும் ஆகிய, பொன் திருவானைக்காவினில் = அழகிய திருவானைக்கா என்ற திருத்தலத்தில், அப்பர் ப்ரியப்படும் = சிவபெருமான் விரும்புகின்ற, பெருமாளே = பெருமையிற் சிறந்தவரே! வேலை போல் = வேல் பாய்வதுபோல், விழி இட்டு மருட்டிகள் = கண் பார்வையால் மயக்குபவர், காம க்ரோதம் விளைத்திடு துட்டிகள் = காமம் குரோதம் என்ற தீக்குணங்களை உண்டுபண்ணும் துஷ்டைகள், வீதிக்கே திரி = வீதியிலேயே திரிகின்ற, பப்பர மட்டைகள் = கூத்தாடுகின்ற பயனற்றவர்கள், முலை யானை = கொங்கையாகிய யானையை, மேல் இட்டே வாரவிட்ட = மேலே எதிர்த்துப் போர் செய்யும்படி ஏவுகின்ற, பொறிச்சிகள் = மந்த்ரவாதிகள், மார்பை தோளை அசைத்து நடப்பிகள் = மார்பையும் தோளையும் அசைத்து நடப்பவர்கள், வேளுக்கு = மன்மதனுக்கு, ஆண்மை செலுத்து சமர்த்திகள் = வீரத்தைத் தருகின்ற சாமர்த்தியசாலிகள், களிகூரும் = மகிழ்ச்சி பொங்கும், சோலை கோகிலம் ஒத்த மொழிச்சிகள் = சோலையில் வாழும் குயில் போன்ற மொழிகளை யுடையவர்கள், காசு அற்றுரை = பணம் இல்லாதவர்களை, இதத்தில் ஒழிச்சிகள் = பக்குவமாக நீக்குபவர்கள், தோலை பூசி மினுக்கி உருக்கிகள் = உடம்பின் மேல் உள்ள தோலைக் கழுவி மினுக்கி ஆடவரை உருகச் செய்பவர்கள், எவரேனும் = யாராக இருந்தாலும், தோய பாயல் அழைக்கும் அவத்திகள் = சேர்தற்கு படுக்கைக்கு அழைக்கும் பயனற்றவர்கள், மோக போக முயக்கி மயக்கிகள் = ஆசைப் போகங்களை எழுப்பி மயக்குபவர்கள், சூறைக்காரிகள் = கொள்ளைக்காரிகள், ஆகிய இத்தகைய வேசையர்களின், துக்க வலை படல் ஒழிவேனோ = துன்பவலையில் சிக்கிக் கொள்வதிலிருந்து அடியேன் நீங்கி உய்வேனோ?

## பொழிப்புரை

காலையில் நீராடி கீழ்த்திசையை நோக்கி, "ஆதித்யாய நம" என்று சூர்ய மந்திரத்தைக் கூறி, தர்ப்பணம், காயத்ரி ஜெபம் அர்ச்சனை முதலியன செய்து வழிபடும் முனிவரர்கள் வாழும் கானகத்தில் ஆச்ரமத்தில் நடந்த உத்தமமான வேள்விச் சாலையை இடையூறின்றிக் காப்பாற்றும் பொருட்டு, எதிர்த்து வந்த கொடியவளான தாடகையைக் கொன்ற கருணைக் கடலான ஸ்ரீராமருடைய திருமருகரே! கரும்பாலையின் சாறு கொதித்து வயலிடத்தே பாய்வதனுல். நெல் பயிர் தழைத்து இனிமை மிகுந்த அமுதம் போல் விளங்க, தேவர்கள் புகழ்ந்து கூறிய வயலூரில் வாழ்கின்ற வேலாயுதக் கடவுளே! சக்கரங்களுடன் கூடிய

தேரோடும் வீதிகள் நிறைந்ததும், திருநீறிட்டான் மதில்களுடைய துமாகிய அழகிய திருவாணைக்காவில் சிவபெருமான் விரும்புகின்ற பெருமிதம் உடையவரே! வேல் பாய்வது போல் கண் கொண்டு மயக்குபவரும், காமக்ரோதம் முதலிய தீக்குணங்களை உண்டுபண்ணும் துஷ்டைகளும், தெருவிலேயே திரிகின்ற கூத்தாடிகளாம் பயனிலிகளும், கொங்கையாம் யானையை மேலே எதிர்த்துப் போர் செயவிடுகின்ற மந்திரவாதிகளும், மார்பையும் தோளையும் அசைத்து நடப்பவர்களும் மன்மதனுக்கு வீரத்தைத் தருகின்ற சாமர்த்திய சாலிகளும், மகிழ்ச்சி மிகுந்த சோலைகளில் வாழும் குயில் போன்ற இனிய மொழிகளை யுடையவர்களும், காசு வரண்டவர்களை மெல்லப் பக்குவமாக விலக்குபவர்களும், தோலைக் கழுவி மினுக்கிக் கண்டோர் மனத்தை உருக்குபவர்களும், யாராயிருந்தாலும் அவர்களைச் சேரும் பொருட்டுப் படுக்கையில் அழைக்கும் பயனிலிகளும், ஆசைப் போகங்களை யெழுப்பி மயக்குபவர்களும், செல்வத்தைக் கொள்ளையடிப்பவர்களும் ஆகிய பொது மாதர்களின் வலையில் சிக்கித் துக்கப்படுவதினின்றும் அடியேன் நீங்கி உய்யமாட்டேனோ?

## விரிவுரை

இத்திருப்புகழில் முதற் பகுதியாகிய நான்கு அடிகளும் விலைமகளிருடைய இழிவை யுணர்த்துகின்றன.

**காலைக்கே முழுகி —**

முனிவர்கள் அதிகாலையில் எழுந்து குளிர்ந்த நீரில் முழுகுவார்கள். சூரிய உதயத்துக்கு முன் எழுந்து குளிர்ந்த நீரில் குளிப்பவர்க்கு நோயணுகாது. இது சுகாதாரமானது.

**குணதிக்கினில் :—**

குணதிக்கு—கீழ்த்திசை.

சூரியன் உதிக்கின்ற கீழ்த்திசையை நோக்கி முனிவர்கள் அதிகாலையில் வழிபாடு செய்வார்கள்.

**ஆதித்யாய என :—**

'ஆதித்யாய நம'' என்பது சூரிய மந்திரம் அதிதிமைந்தராதலால் சூரியபகவான் ஆதித்தன் என்று பேர் பெற்றார்.

**தர்ப்பணம் :—**

தர்ப்பணம்—உவப்பித்தல். சூரிய மூர்த்தியை மகிழச் செய்யும் பொருட்டு தர்ப்பணம் புரிதல் வேண்டும்.

**காயத்ரீ செபம் ;—**

ஓம் பூர் புவ: சுவ: ஓம் தத் ஸவிதுர் வரேண்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி தியோ யோந: ப்ரசோதயாத்.

இதன் பொருள்

பூ: —சகல ஜீவனுதாரன்-உயிரினும் பிரியமானவன் - தன்னுள் தானுனவன் பெயர் பூ என்பது.

புவ: —சகல துக்க ரகிதன்-எவனது சேர்க்கையால் ஜீவன் சகல துக்கங்களையும் நீக்கிக் கொள்ள முடியுமோ அவனுகிய கடவுளின் பெயர்.

சுவ :—எல்லா உலகங்களிலும் வியாபித்து அவைகளைத் தரித்திருப்பவன் எவனே அவன் பெயர் சுவ:

இம்மூன்று வசனங்களும் தைத்திரீய ஆரண்யகத்தில் (7-5) உள்ளது

யஃ —எது

ந: —நம்முடைய

திய: —அறிவினை

ப்ரசோதயாத்—உந்துகின்றதோ

தத் —அந்த

ஸவிது: —ஞாயிற்றின்கண் விளங்கும்

வரேண்யம் —வணங்கற்பாலதான

பர்க்க: —பர்க்கன் என்னும் பேருடைய சிவபெருமானுடைய

தேவஸ்ய—அருள் ஒளியை

தீமஹி—நாம் நினைக்கின்றோம்.

இது காயத்ரி மந்திரம். காயத்திரி மந்திரம் வேதத்திற்குத் தாய் போன்றது.

எவர் தன்னைக் கானம் பண்ணுகின்றார்களோ அவர்களை ரட்சிப்பது என்பது காயத்ரி என்ற சொல்லுக்குப் பொருள்.

''காயந்தம் த்ராயதி இதி காயத்ரி''

**அர்ச்சனை :—**

மலர்கள் இட்டு இறைவனை வணங்குவது அர்ச்சனை.

முனிவர்கள் இத்தகைய வழிபாடுகள் புரிகின்றார்கள்.

**கானத்தாசிரமத்தினில் :—**

விசுவாமித்திரர் தவஞ் செய்யும் இடம் சித்தாச்ரமம். இது மிகப் புனிதமானது. திதி முதலானவர்கள் தவஞ் செய்த இடம்.

**உத்தம வேள்வி :—**

வேள்விகள் மூன்று வகைப்படும்.

(1) தன் பகைவரை யழிப்பதற்காகச் செய்வது. இது அபிசார வேள்வி. தாரகவனத்து மகரிஷிகள் சிவபெருமான் மீது வெகுண்டு செய்த யாகம். இது அதமம்.

(2) சுவர்க்காதி புவன போகங்களை விரும்பியும், புத்திரப் பேறு வேண்டியும் செய்யும் அசுவமேதம், இராஜசூயம், புத்ரகாமம் என்பனவாதி யாகங்கள். இவை மத்திமம்.

(3) உலக நலன் கருதிப் பரமஞானிகள் புரிவது.

இந்த வேள்வி உத்தமம். கலி நலியுமாறு அப்பூதியடிகள் நாள்தோறும் யாகம் செய்தார் என்று அப்பரடிகள் கூறுகின்றார்.

"அஞ்சிப்போய் கலி நலியத் தழலோம்பும் அப்பூதி"

**வேள்விச்சாலை யளித்தல் :—**

இவ்வாறு உலக நலன் பொருட்டு மாமுனிவர்கள் புரியும் சிறந்த வேள்வியைக் கொடிய அரக்கர்கள் அழித்து இடர்புரிவார்கள். அவ்வாறு இடர் புரிவதைத்தடுத்து அவ்வேள்வியை இறைவன் காத்தருள்வான்.

காசிபருடைய வேள்வியை முருகவேள் காத்தருளினார்

"மந்திர விதியின் மரபுளி வழாஅ
அந்தணர் வேள்வி ஓர்க்கும்மே ஒரு முகம்"
—திருமுருகாற்றுப்படை.

"அந்தண் மறைவேள்வி காவற்கார"
—(முந்துதமிழ்) திருப்புகழ்.

இங்கே விசுவாமித்திரருடைய யாகத்தை இராமமூர்த்தி காத்தருளினார்.

**காதத் தாடகையைக் கொல் க்ருபைக்கடல் :—**

காதகம் என்ற சொல் காத என்று வந்தது. காதகம்—கொடுமை.

சுகேது என்ற யட்சனுடைய தவத்தால் ஆயிரம் யானை பலத்துடன் பிறந்தவள் தாடகை. சுந்தன் என்ற யட்சன் தாடகையை மணந்தான். சுபாகு, மாரீசன் என்ற புதல்வர்கள் பிறந்தார்கள்.

தாடகையின் கணவனாகிய சுந்தன் அகத்தியர் ஆச்சிரமத்தில் இருந்த பூ மரங்களை அழித்தான். அகத்தியருடைய பார்வையால் அழிந்தான். அதனால் வெகுண்ட தாடகையும் அவளுடைய இரு புதல்வர்களும் கல்லும் மண்ணும் வீசி அகத்தியரை எதிர்த்தார்கள். "நீங்கள் அசுரர்களாகக் கடவது" என்று அகத்தியர் சாபம்

இட்டார். பிறப்பால் யட்சர்களாகிய இவர்கள் சாபத்தால் அசுரர்களாக ஆனுர்கள். அதனுல் மிகுந்த தீமைகளைப் புரிந்து திரிந்தார்கள். சதா விசுவாமித்திரருக்குக் கொடுமை செய்தார் கள். இராமர் தாடகையைக் கொன்று யாகத்துக்கு உதவி புரிந்தார்.

அதனுல் கிருபைக்கடல் என்ருர்.

கம்பரும் இதனை, ‘‘கடுமையார் கானத்தில் கருணையார் கலியேக’’ என்கின்ருர்.

**ஆலைச்சாறு கொதித்து வயற்றலை பாயச்சாலி தழைத்திரதத்தமுதாக :—**

வயலூரில் கரும்பாலையின் சாறு பாய்ந்து நெற்பயிர் விளை கின்றது. அதனுல் அந்த நெல்லரிசி அமுதம் போல் இனிமை யாகத் திகழ்கின்றது. என்று அருணகிரிப் பெருமான் வயலூரின் பெருமையை எடுத்துரைக்கின்ருர்.

தேவர்கள் மெச்சிய செய்ப்பதி :—

செய்—வயல்; பதி—ஊர்; செய்ப்பதி—வயலூர்.

வயலூரின் பெருமையைத் தேவர்கள் புகழ்ந்து கொண்டாடு கின்ருர்கள்.

**ஆழித்தேர் மறுகிற்பயில் :—**

திருவானைக்காவின் வீதிகளில் தேரோடும் விழா மிகச் சிறப் பாக நடைபெறுகின்றது...

**திருநீறிட்டான்மதில்:—**

திருவானைக்காவில் ஐந்தாவது பிரகாரச் சுற்றுமதிலை சிவபெருமானே சித்தராக நின்று புதுக்கியருளினுர். வேலை செய் யும் ஆட்களுக்கு ஒரு இலையில் திருநீறு மடித்துத்தருவார். அவர் கள் அதைப் பெற்று வீட்டுக்கு வந்து பார்ப்பார்கள். அவரவர்கள் செய்த வேலைக்கு ஏற்ப அது பொன்னுக மாறி நிற்கும். இப்படி திருநீறுதந்து புதுக்கிய மதில் ஆதலினுல் இது திருநீறிட்டான் மதில். விபூதிப் பிரகாரம் எனப் பேர் பெற்றது. மிகவும் புனித மானது. மகிமை வாய்ந்தது.

## கருத்துரை

முருகா ! மாதர் வலைப்படாது அடியேனைக் காத்தருள்.

உ
முருகா

# கற்பு

---

## பாவம் குறையும் வழி

பண்டு முதல் தொண்டு புரியும் ஆன்ஞேர் பலர் வாழும் அரிய நகரம் திண்டுக்கல்.

சிவகாமி சுந்தரம் என்ற அம்மையார் தெய்வபக்தி அடியார் பக்தியில் சிறந்தவர்.

''தேடிய மாடுநீடு செல்வமும் தில்லைமன்றுள்
ஆடிய பெருமான் அன்பர்க்கு ஆவன ஆகும் என்று
நாடிய மனத்திஞேடு நாயன்மார் அணைந்தபோது
கூடிய மகிழ்ச்சியோடு குறைவறக் கொடுத்து வந்தார்''

என்ற சேக்கிழார் பெருமான் திருவாக்குக்கு இலக்கியமாக இந்த அம்மையார் பண்பட்ட உளத்துடன் வாழ்ந்தார். புண்பட்ட உள்ளத்தாரைக் கண்பட்ட போதெல்லாம் அவர்க்குத் தன்ஞல் இயன்றதை ஈந்துவக்கும் இயல்புடையவராய் விளங்கிஞர். வந்தவர்கள் மனம் மகிழ முகமலர்ந்து அகங்குளிர்ந்து அன்னம் இட்டு உதவுவார்.

முழுநிலா நாள் இரவு நிலாமுற்றத்தில் சிவகாமி சுந்தரம் அமர்ந்திருந்தார். அவருடைய புதல்வி சந்திரா ஊரில் உள்ளவர்களின் குற்றங்குறைகளைக் கூறிப் பரிகசித்தாள்.

சிவகாமிசுந்தரம் ''மகளே! பிறருடைய குற்றங்குறைகளை ஒரு போதும் கூறக்கூடாது.

''கொல்லா நலத்தது நோன்மை; பிறர்தீமை
சொல்லா நலத்தது சால்பு''

என்கின்ருர் திருவள்ளுவர். வள்ளுவருடைய நெறி வீட்டிலும் நாட்டிலும் பரவுதல் வேண்டும். வள்ளுவர் காட்டிய வழிதான் மனித குலத்தை உயர்த்தும். அம்மா! குழந்தாய்! நீ சிறு பெண். உனக்கு இப்போது நான் கூறும் அறவுரையை எப்போதும் மறவாதே. உலகிலே குற்றமில்லாத மனிதனே கிடையாது. பெரியோரிடத்தும் ஏதாவது ஒரு குற்றம் இருக்கும். செம்பு கலவாத அணிகலன்களே கிடையாது.

அன்றியும் நாம் சிற்றறிவு படைத்தவர்கள். நமது அறிவில் சில சமயத்தில் நன்மையும் தீமையாகத் தோன்றும். அடுத்துள்ள ரயில் வண்டி ஓடும்போது நாம் ஏறியுள்ள ரயில்வண்டி ஓடுவதுபோல் தோன்றுகின்றதல்லவா? கண்ஞல் கண்டதும் பொய்; காதால் கேட்டதும் பொய்; தீரச் சிந்தித்துப் பார்க்கவேணும். ஒரு சந்யாசி

தனது பூர்வாச்சிரமத்து உடன் பிறந்தாளுடன் ஒரு வண்டியில் போவார். அதனைப் பார்த்து சந்யாசி ஒரு இளம்பெண்ணுடன் தொடர்பு கொண்டு போகின்றார் என்று கூறி பிழையான பிரசாரம் பண்ணக்கூடாது.

குற்றமற்றவர் மீது குற்றங்குறைகளை ஏற்றிச் சொல்பவர் தாம் அரிதின் செய்த புண்ணியத்தை அவரிடம் இழந்து, நிந்திக்கப்பட்டார் செய்துள்ள பாவத்தில் ஒரு கூற்றைப் பங்கிட்டுக் கொள்ளுகின்றார்.

எனவே சாதுக்கள் அறியாமல் செய்த பாவத்தை அவரை இகழ்ந்தவர்கள் பெறுகின்றார்கள்.

மகளே! இதனை விளக்க ஒரு பழைய வரலாற்றைக் கூறுகின்றேன். கவனமாகக் கேள்.

விட்டலபுரம் என்ற நகரத்தை **விஜயாலயன்** என்ற மன்னவன் அரசு புரிந்து வந்தான். அறம், பொருள், இன்பம் என்னும் அற நெறி வழாமல் பொருந்தி, மறங்கடிந்து, பகையை ஒடுக்கி செம்மையுடன் செங்கோல் தாங்கி நின்றான். அவன் செய்த தவத்தினால் ஒரு பெண்மகவு பிறந்தாள். அம்மகவுக்குத் **திருஞான சுந்தரி** என்று பேர் சூட்டினான்.

குழந்தை பிறந்தபின் அரசமாதேவி நோய்வாய்ப்பட்டு மெலிந்து விட்டாள். மணிமந்திர மருந்துகளால் அவள் குணப்படாமல் இறைவனடி சேர்ந்தாள். தாயற்ற சேயை விஜயாலயன் கவனமாக வளர்த்தான். 'இனி வேறு பெண்ணை மணந்து கொண்டால் தன் அன்புப் புதல்விக்கு மாற்றாந்தாயின் கொடுமை யுண்டாகும். ஆதலால் புதல்வியின் நலமே சிறந்தது' என்று வேந்தன் கருதி உலக இன்பத்தைத் துறந்தான். தன் சுகத்தை மறந்தான். கண்ணை இமை காப்பதுபோல் புதல்வியைக் காத்து வந்தான். திருஞான சுந்தரி அழகின் கொழுந்தாக வளர்ந்தாள். கல்வி பயின்று வந்தாள்.

ஒருநாள் மன்னன் வேடர் வில்லியருடன் வேட்டைக்குச் சென்றான். காட்டை வளைத்துக் கடுங்கணைகளைச் சொரிந்தான். எங்குந் திரிந்தான். விலங்குகளைக் கொன்றான். பசி தாகத்தால் களைத்தான். குதிரைமீது ஏறி நாட்டை நோக்கி வந்து கொண்டிருந்தான்.

வழியில் பரமஞானி ஒருவர் ஒரு மரத்தடியில் அமர்ந்திருந்தார். அவர் பற்றற்ற நற்றவர். அவருடைய சித்தம் சிவன்பால் பொருந்தியிருந்தது. மூச்சு மட்டும் உலாவிக் கொண்டிருந்தது. உரையற்ற நிலையில் கரையற்ற தவ நெறியில் அவர் அமைதியுடன் இருந்தார்.

பசி வந்தபோது கையை நீட்டுவார். ஏதாவது கையில் விழுந்தால், விழுந்தது இன்னதென்று கருதாமல் வாயில் இட்டு விழுங்கிக் கண்ணை மூடிவிடுவார்.

அரசன் குதிரைமீது வரும்போது அப் பரமஞானி கையை நீட்டினர். அரசன் பரமசாது; மிக நல்லவன். ஆனல் வேட்டையாடிக் களைத்து, பசி தாகத்தால் இளைத்து வரும் அவன் சிறிது குண வேற்றுமை யடைந்தான். ''நானே வேட்டையாடி வேர்த்து நலிந்து மெலிந்து வருகின்றேன். இவர் நம்மைப் பார்த்துக் கை நீட்டி யாசிக்கின்ருரே?'' என்று கூறி சிறிது சீறினன். அப்போது குதிரை லத்தி யிட்டது. அதில் சிறிது எடுத்து மாதவருடைய கையில் இட்டான் மன்னவன். கையில் விழுந்தது இன்னது என்ற எண்ணமே வராத முனிந்திரர் குதிரை லத்தியை வாயில் இட்டு விழுங்கினர். அவர் உள்ளம் உலகில் இல்லை. இறைவனுடைய திருவடியில் பதிந்திருந்தது.

விஜயாலயன் அரண்மனைக்கு வந்தான். அரச காரியங்களில் கண்ணுங்கருத்துமாக நின்ருன். இந்த நிகழ்ச்சி நிகழ்ந்து பத்து ஆண்டுகள் பறந்தன.

ஒருநாள் மன்னவனுடைய அரண்மனைக்கு ஒரு தவமுனிவர் எழுந்தருளினர். சாந்தமுடைய முனிவரை வேந்தன் அன்புடன் பணிந்து பதமலரை அருச்சித்து, அறுசுவையுண்டியும் தந்து உபசரித்தான்.

''குருநாதா! அடியேனுக்கு இந்தவுலகில் ஒன்றுமே தேவையில்லை; பொன்னும் மணியும் வீடும் நாடும் என்பால் நிரம்பக் குவிந்திருக்கின்றன. நான் விரும்புவது பிறவாமை ஒன்றுதான். எனக்கு மீண்டும் தாய் வயிறு வரக்கூடாது. பரமஞானியாகிய தேவரீர் எனக்கு அது கைகூடுமாறு கருணைபுரிய வேண்டும்'' என்று முறையிட்டு அவர் திருவடிமீது வீழ்ந்து அழுதான்; தொழுதான்.

முனிவருக்கு சாக்ஷுஷி என்ற மந்திர சித்தியுண்டு. அதனல் எங்கே இருப்பதும் எங்கே நடப்பதும் அவர் கண்ணுக்குத் தெரியும். முக்காலமும் உணர்ந்த முனிவர் அவர். சிறிது நேரம் கண்களை மூடிச் சமாதியில் இருந்தார்.

பிறகு கண்களைத் திறந்தார். ''மன்னவனே! நீ நல்ல பரிபக்குவம் உடையவன். உனக்குப் பிறவாமை உண்டாக ஒரு தடையுளது. சில காலத்துக்கு முன் வேட்டைக்குச் சென்று திரும்பினை. அப்போது உலகை மறந்த சிவஞானி ஒருவர் கையை நீட்டினர். பசி தாகத்தால் களைத்திருந்த நீ அவர் பெருமையறியாது குதிரை லத்தியை அவருடைய கரத்தில் இட்டனை. அவர் அதனை விழுங்கிவிட்டார். நரக லோகத்தில் அந்தக் குதிரை லத்தி ஒரு குன்றுபோல் வளர்ந்து கொண்டிருக்கின்றது. அதன் அடியில் இது விஜயாலயனுக்கு உரியது என்று எழுதியுளது. நான் இங்கிருந்தே சாக்ஷுஷி என்ற மந்திர சித்தியால் அதனைப் பார்க்கின்றேன். அப்பனே! நீ மாண்டபின் நரக லோகம் போய் சிவஞானிக்கு இட்ட அக்குதிரை லத்திக் குன்றத்தைச் சிறிது சிறிதாக உண்டு முடிந்தாலன்றி வினை ஒழியாது; வினையால்

## சந்தா நேயர்களுக்கு முக்கிய அறிவிப்பு

அச்சுக்கூலி ஏற்றத்தாலும், அச்சுத்தாள் விலையேற்றத்தாலும் ஏற்படும் அதிகச் செலவை ஓரளவு இதுகாறும் சமாளித்து வருகின்றோம் இதற்கிடையே மத்திய அரசினர் சிறிய பத்திரிகைகளுக்கான தபாற்கட்டணத்தை ஒன்றுக்கு இரண்டரைப் பங்காக உயர்த்தி விட்டனர். மற்ற தபாற் கட்டணங்களையும் கூட்டிவிட்டனர். ஆக இவ்வாறு இதுபொழுது ஏற்பட்டுள்ள அதிகச்செலவுகளைச் சமாளிக்க ஆண்டுச் சந்தாத் தொகையை மேலும் கூட்டவேண்டிய நெருக்கடி ஏற்பட்டுள்ளது. எனவே அன்பர்கள் அடியிற் குறிப்பிட்டுள்ள ஆண்டுச் சந்தாத் தொகைக்கும் தாங்கள் அனுப்பியுள்ள தொகைக்குமுள்ள குறைத்தொகையை விரைவில் அனுப்பிவைக்க வேண்டுகின்றோம்.

கீலக ஆண்டு முதல் ஆண்டுச் சந்தா

| | | | |
|---|---|---|---|
| இந்தியா, இலங்கை | ... | ரூ. | 3-50 |
| மற்ற நாடுகள் | ... | ரூ. | 5-50 |

மானேஜர், திருப்புகழமிர்தம்
சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2.

---



---

## அன்பர்கள் கவனத்துக்கு

நமது காரியாலயத்துக்கோ, ஆசிரியருக்கோ எழுதப்படும் கடிதங்களுக்குப் பதில் விரும்புவோர் பதிலுக்காக கார்டோ, தபால் தலைகளோ அனுப்பினாலொழிய பதிலனுப்ப வசதிப்படாது.

மானேஜர், திருப்புகழமிர்தம்.

Edited by Sri KIRUPANANDAVARI & Published by M. Madusoodam Sivam, 89, Singanna Chetty Street, Madras-2. Printed by K. M. John at Jeevan Press, 8, Titarappa Mudali Street, Triplicane, Madras-5.